## அரிதாரபற்பம்.

பாடினேனரிதாரப் பற்பந்தன்னைப் - பண்பாகச்சொல்லுகி
றேன்பரிந்துகேளு- நாடினேனரிதாரக்கட்டிதன்னை - நலமானகற்
சுண்ணந்தன்னில்நீற்றி - தேடினேன்மேனியிலைக் கல்லுச்சுண்ணம்
சேத்தரைப்பாய்சமன்கொண்டுமைபோலாட்டி- சூடினேன்கட்டி
யின்மேல்கவசங்கட்டி- சுகமாகமண்சீலை வலுக்கச்செய்யே (௫௪௨)

செய்யப்பா*குக்குடத்தில்நீறிப்போகுஞ் செயமானபற்பத்
தையெடுத்துக்கொண்டு-வையப்பாசயங்கள்விஷபாகம்பாண்டுவள
மானசுரங்களொடுபித்தரோகம்-கையப்பாஎலிக்கடியும் பயித்தியந்
தீருங் கருதானபற்பமிதுஅருந்துக்கொள்ளு - நீயப்பாபோகருட
கடாட்சத்தாலே-நிச்சயமாய்வைத்தியத்தைச்செய்துப்பாரே ...()

* குக்குடம்-கோழியளவுபுடம்.

### சகலரோகத்துக்குஞ்-சூக்ஷகுளிகை.

பாரடாரசமுந்*திரிபாலைகெந்தி - பண்பானமிளகுடனேகடு
குஞ்சேர்த்துநேரடாபொடியாக்கிப்பனையின் வெல்லம்நேர்சேர்ந்
துசுண்டைக்காய்ப்போலேயுண்டை-வீரடாவொருவுண்டைவுதய
ந்தன்னில் - விழுங்கிவிட்டுகடிகையாநேரஞ்சென்று - சீரடாஆவின்
பால்படியுங்கால்தான்-சிறப்பாகத்தான்குடிப்பாய்திண்ணந்தானே

* திரிபாலை-கடுக்காய்-தான்றிக்காய்-நெல்லிக்காய்,

தானேதானிந்தவிதம் நாற்பத்தெட்டு - தயவாகநாட்கொள்
ளத்தீரும்நோய்கேள் - மானேதான்குஷ்டமொடுகுன்மஞ்சூலைமை
ந்தனேபெருவயிறும் பிறமைபித்தம் - கோனேதான் குலைநோவு
சொரியுமாறுங்-கொடிதானபத்தியந்தானில்லைப்பாரு- நானேதான்
போகருடகடாட்சத்தாலே-நலமாகப்புலிப்பாணிபாடினேனே ()

### பித்தபயித்தியத்துக்கு-பற்பம்.

பாடினேன்நாய்மண்டைமாட்டுமண்டைபாங்கான மனுஷரு
டமண்டைபோடு-நாடியேசரியெடையாய்க்கலவத்திட்டு-நலமான
கழுதைப்பால்தன்னாலாட்டி - ஆடியே மைபோலவழித்தெடுத்து
அடவாகவில்லைதட்டியுலரப்போட்டு - தேடியேகுக்குடத்திற்புடத்
தைப்போடுதெளிவாகப்பற்பமதுதவளமாச்சே... ... (௫௪௫)

ஆச்சப்பாகழுதைப்பால் துட்டெடைதான்ரண்டு - அடவான
இஞ்சிசார்துட்டெடைதான்விட்டு-வாச்சப்பாசற்கரை துட்டெடை
தான்போட்டு -வளமானபற்பமதுகழற்சிகூட்டி - யேச்சப்பாகொ
டுத்துவிடு ஈராறுவேளை - பெழுத்தபித்த பயித்தியமும் பிரமையே

வல்-போச்சப்பா தேவலைக ளிதற்கோலீடு புகைபில்லிவைப்புமு தல் தீருந்தானே ... ... ... (௫௪௯)

பில்லிபயித்தியத்துக்கு.

தாமென்றகழுதைபுட இடபாகத்தில் தான்வளர்ந்த சடையுட னேபாம்புச்சட்டை-மானென்றவேப்பெண்ணெய் செஞ்சிலைசுற்றி மைந்தனேசுடமொன்றதயிலப்வாங்கி - கோனென்றவுள்ளுக்குக் கா ண்டிலீதங் - கொடுத்திடுவாய்மூன்றுநாளாறுவேளை - தேமென்ற மேலுக்கும்பூசுபூசு- தெளிவாகும்பில்லிபயித்தியந்தானுளாறே ()

சகலரோகத்துக்குச் சித்திரமூல
எண்ணெய்.

ஆறுதகூட்டுக்கு எண்ணெய் சொல்வேன் அடவாகஎள்ளெண் ணையாவினெய்யும்- கூறாதவகைக்குவகைப்படிதான்பாதி - கொடி தானசித்தருட * மூலப்பட்டை-நேராதப்பலமொன்றுநீர்விட்டா ட்டி நேராகஎண்ணெயிலேகலக்கிப்போட்டு - மீறுதமெழுகுபதந் தனிலிறக்கி-மிஞ்சாமல்துட்டெடைதான்கொண்டுபாரே... (௫௪௧)

* மூலப்பட்டை-சித்திரமூலப்பட்டை.

பாரேநீநாற்பதுநாள்கொண்டபோது - பாங்கானகுடெங்கே மேகமெங்கே- வீரோநீவிப்புருதிகண்டமாலை- விதமானபுண்புறைக ள்சிரங்குந்திரும்- திரோநீவாயுவொடுசூலைக்குத்துதிறமானசெங்கிரந் தித்தடிப்புமாறும்- சேரோனீபயித்தியந்தானிதற்கோஇல்லை- செய லானபோகருடகடாட்சந்தானே ... ... ... (௫௫௰)

ஆக்கிராணம்.

தானனயாக்கிராணஞ்சொல்வேன்கேளு - தயவானசுண்டை வேர்சித்திரமூலம்- வானன அழிஞ்சிவேர்கண்டங்கத்திரி- வளமான தூதுவளைபுளகறணைவேளை- மானனயாடுதொடா குப்பைமேனி- வளமானவெள்ளைச்சாரணையும்வேலி- பானனவகைக்குவகைவிராக னென்று-பண்பானஎருக்கிலையுஞ்சுணையில்பாரே ... (௫௫௧)

பாரேநீசமுத்திராப்பழமுஞ்சுக்கு பாங்கான அக்கிராகாரம் ஓமம்-சேரோனீஅதிவிடையம்*அரத்தை*காயஞ்- செயலானதிப்பி லியுந்திப்பிலிமூலம்- வீரோனீதேசாவரங்கஸ்தூரிமஞ்சள்வீறுனவா ள்மிளகுகடல்நுரையுங்கடுகு-தீரோனீகுராசானியோமம்* ரோகணி திறமானகருஞ்சீரம்பேரரத்தைகாணே ... ... (௫௫௨)

* அரத்தை-சிற்றரத்தை.

* ரோகணி-கடுகுரோகணி.

காணேனீவசம்புவேப்பரிசியோடு-கனிவானசாம்பிராணிவகை வகைக்கு- தானேனீவிராகனிடையிறுத்துக்கொண்டு-தயவானச்சுக்

கெல்லாமொன்றாய்க்கூட்டி- பாணேனியத்தியின்பால்வெள்ளாட்டு
நிரும்பாங்காகமிசரிலைவத்துலர்த்திக்கொண்டு- மாணேனிபொடி
த்துபேய்ச்சுரைக்குடுக்கை - மைந்தனே தூளடைத்து வைத்துக்
கொள்ளே ... ... ... ... (௫௫௫)

கொள்ளவேபணவெடைதானுசிக்கேற்ற - கொற்றவனே சுன்
னியதுவிலகும்பாரு- அள்ளவேகாகிதத்தில்வைத்துச்சுற்றி- அடவா
கநிம்பஎண்ணெய்தனில்துவைத்துமெள்ளவேபொருந்தியதையாற்
றிப்போட்டு-மேன்மையாய்புகையதனைநாசிக்கேற்று- தள்ளவேசிர
சிலுள்ளவியாதிதீருந்-தலைவலியுமொரு தலையுமிடிப்புபோமே ()

பேமேனி நீர்ப்பாச்சல்சயமும்பித்தம்- பொல்லாத கபாலத்
தின்சூலைவாயு - ஆமேனி பீநசமுஞ்சகலதோஷம் - அடவானமண்
டைகுத்துகெர்ப்பநோயுந்-தாமேனிசிரசிலுள்ள வியாதிக்கெல்லாந்
தாக்கடாஇப்புகையைச்சண்ணுஞ்சண்ணும் - வாமேநீயின்னமொ
ருசூட்சஞ்சொல்வேன்-மாராதரணங்களுக்குவழுத்துறேனே ()

இரணங்களுக்குப் - புகை.

வழுத்துறேன்கண்டத்தின்மேலேயுள்ள - வாயுமுதல் கண்செ
வியிக்நோயுந்தீரும் - பழுத்துறேன்பற்கிட்டுசென்னிதோஷம் பாங்
கானமுனிகருப்பெதுவானாலும் கொழுத்துறேன்பணவெடை ஆக்கி
ராணத்தோடே- குணமானநவாச்சாரம்நறோசேர்த்து- சழுத்துறே
ன்கற்சுண்ணங்கொஞ்சங்கூட்டி-சுருக்காகமத்தித்து நாசிக்கேற்றே.

ஏற்றேனீஆக்கிராணங்கழஞ்சியொன்று - இதமானஅரிதாரம்
லிங்கம்பூரம்-பாத்தேனிகொடிக்கள்ளிப்பட்டைதூளும் - பாங்கான
கழுதைலத்திபொடியுமப்பா - போற்றேநீவகைவகைக்கு கழஞ்சிஒ
ன்றுபொங்கமுடன்திருகுகள்ளிப்பாலாலாட்டி - சேர்த்தேநீபுலர
வைத்துபெடுத்துக்கொண்டு- செயமானபுங்குபுளி தன்னிற்கேளே.

கேளேதான்தணலிலேபொடியேபோட்டு - கெடியானபுண்க
ளிலேபுகைதான்சார-சூளேதான்வெடிசூலைமேகவெட்டை- சுடுகிர
ந்தியனையாப்பு பௌத்திரங்கள் - கோளேதான்இப்புகையில்தீரும்
பாரு கொற்றவனேபொடியெடுத்து அலரிப்பாலில் - நாளேதான்
மத்தித்துஇரணத்தில்போட - நாயகனே இரணங்களெல்லாந் தீரு
ந்தானே ... ... ... ... ... (௫௫அ)

சூட்டுக்குமுழுக-நாமனைத்தைலம்.

தானுனஎள்ளெண்ணெய்ப்படிதானொன்று- தகைமைகுளிர்த்
தாமரைச்சாற்படிதானொன்று-பானைபதந்தனிலேகாய்ச்சியப்பா
பக்குவமாய்இறக்கித்தானேவைத்து- மானைபூலாக்கிழங்குப்பச்
சிலையுமப்பா- வகைவகைக்குவிராகனேந்துநிறுத்துக்கொண்டு தேனு
கப்பொடிப்பண்ணித்துவிபோடு - தெளிவாகவடித்திறுத்து முழு
குவாயே ... ... ... ... ... ... ... ... (௫௫௯)

முழுகயிலேசூடெல்லாந் தணிந்துபோகு முன்னிலையாகண்
ணெரிவுகுளிர்ச்சியாகும்-பழுகாதுதிரேகமதுபொன்போல்மின்னு
ம்பண்பானநீர்கடுப்புவினையுந்தீரும்-அழுகாதுவிந்துவங்கே இருக்
கும்பாரு அடவாகமூலத்திற் சூடும்போகும்-நழுகாதுகுலையுடகரு
ணைவாங்கும்- நலமானபோகருடகடாக்ஷந்தானே ... (௫௱௰)

## வைத்தியமுப்பு.

தானானவைத்தியமுப்புமார்க்கம் தயவாகச்சொல்லுகிறேன்த
ருமமாக- கோனானபங்குனிசித்திரையில்பூனீர்க் கொற்றவனேமண்
படாதெடுத்துவந்து-மானானநாலுபடிபாண்டத்திலிட்டு மைந்தனே
கடலுப்புபடிதான்ரண்டு-வானானகற்சுண்ணம் படிதான்ரண்டு வள
மான அமுரியதுபடிதானெட்டே ... ... (௫௱௧)

எட்டதுதான்வார்த்தபின்புஎள்ளெண்ணெயப்பா இதமாகப
டிஅரைதான் அளந்துவாரு தொட்டதுதான் கலக்கியதைதெளிவிறு
த்து தோணவேஉப்பாகுமட்டுங்காய்ச்சி- விட்டதுதான்அமுரிபடி
யெட்டேவிட்டு விதமாக இவ்விதமாய்ப்பத்துமுறைகாச்சு - பட்
டதுதான் குழம்பதுபோலாகும்பாருபாங்கானஎருச்சாம்பல்சொ
ல்லக்கேளே ... ... ... ... (௫௱௨)

கேளேநாம்பெருச்சாம்பல்பரப்பிமைந்தா கெணிதமுடன்சல்
லாவைவிரித்துப்போட்டு- நாளேதாம்இதில்வாருஇருக்கும்போதுந
லமாகஉண்டையதாயுருட்டிப்போடுநாளேதான்ரவியில்வைத்துஎடு
த்துக்கொண்டு-சுகமாகநெற்பிசரிஒருபாண்டத்தில்-வாளேதானை
ப்பாண்டமதனில்விட்டு-வளமாகஅதன்மேல்மல்லிகையினிலையே ()

மல்லிகையினிலைபரப்பியிந்தஉண்டை-மைந்தனேமேல்வைத்
து இலையால்மூடி-அல்லியேயதின்மேலேநெல்லிட்டப்பா அடவாக
சட்டிகொண்டுமூடிஎரி-வல்லியேநெல்லுவந்தபின்னெடுத்துவை
த்து-வளமாகசிப்பிநூறிறச்சியொக்க-கல்லியே துவாரமிட்டுச்சொ
ல்லக்கேளு-கருத்தாக*வீரம்*பச்சைபூரந்தானே... ... (௫௱௪)

* வீரம்- சைவீரம்.

* பச்சைபூரம்-பச்சைக்கர்ப்பூரம்.

தானானபூரமுடன்பூனீரப்பா தயவாகவகைவகைக்கு விராகன்
மூன்று-கோனானஇவைநான்கும்பொடியாய்ச்செய்து - கொற்றவ
னேசிப்பியுடதுவாரந்தன்னில்-மானானசிப்பிதொறுகொஞ்சம்பெய்
டுமைந்தனேசட்டியின்மேல்பரப்பிவைத்து-பானானசெயநீரும்இ
றங்கும்பாரு-பாங்காகஇதையெடுத்துப்பதனம்பண்ணே (௫௱௫)

பண்ணப்பா நாதவிந்து ரண்டுகொணும் - பன்பான இளனீருஞ்ச
மனுச்சேர்த்து - நன்னப்பா பாவேண்டு ஊரமுஞ்சூதம் நலமாகக
குநாபிபச்சைசூரம் - உண்ணப்பா ஆறுபுள்ளிவண்டில் மூட்டை - உத்த
மனேசினமுடன் *சாரமப்பா - வன்னப்பா வகைவகைக்கு பணவெ
டைதான்வீதம் - வகையாகப்பொடிப்பண்ணியிளனீரிற்போடே ()

* சாரம் - நவச்சாரம்,

போடேதான் தெளிவிறுத்துன்னைதன்னை - பொங்கமுடன் இள
னீரால்சாமமாட்டி - யாடேதான் வில்லைதட்டி ரவியில்போட்டு அட
வாககாய்ந்தபின்பு சொல்லக்கேளு நாடேதான் *பேரண்டம்பொடிய
தாக்கி நலமான ஓட்டின்மேல்பரப்பிவைத்து கூடேதான் அதன்மே
லேவில்லைவைத்து - குணமாக அதன்மேலே பொடியைப்போடே ()

போடப்பா மேல்மூடிச்சீலைசெய்து - புனிதமுடன் பத்தெருவில்
புடத்தைப்போடு - சாடப்பா இம்முறையாய் ஐந்துபோடுகசடமவே
சுண்ணமாயிருக்கும்பாரு - பாடப்பா *பேரண்டஞ்சிற்றண்டத்
தோடுபாங்கான சிப்பியுநண்டோடு நத்தை - மாடப்பா இதையெல்லா
ம்வெவ்வேறாக - மைந்தனே *சிற்றண்டைக்கருவாலாட்டே (சகூஅ)

* பேரண்டம் - தலைவோடு.

* சிற்றண்டம் - கோழிமுட்டை.

ஆட்டியே ஊரலவைத்து உலையிலூத - அப்பனே அஞ்சுதான்சுண்
ணமாகும் - நாட்டியே அஞ்சுண்ணஞ்சமனுக்கூட்டி - நலமாக முன்
விட்டசெயனீர்விட்டு - கூட்டியேதானரைத்துக் குகைபிடித்துக் கு
ணமாகசில்லுசெய்து முன்சுண்ணத்தை - வாட்டியே செயனீரால்
மைபோலாட்டிவளமாகத்தான் ரவியிலுலரப்போடே ... (ருசுசு)

போடேநீ அஞ்சுசுண்ணக்குகையில்வைத்து போதகமாயஞ்
சுசுண்ணஞ்சில்லும்போட்டு - யாடேநீசுண்ணாம்புச்சீலைசெய்து அட
வாகப்புடம்போட்டெடுத்துக்கொண்டு - நாடேநீ அஞ்சுதரமிந்தபா
கம்நலமாகப்புடம்போட்டெடுத்துக்கொண்டு - மாடேநீ நாதாக்கள்
சாபந்தீரமைந்தனே யாத்தாளைபூசைபண்ணே... ... (ருஎய)

பண்ணவே சுண்ணத்தால்சுண்ணமாகும் பாங்கான செந்தூரம்
மெழுகுமாகும் - நண்ணவே கட்டினமுமுறுக்கினமுமாகும் நலமா
னசரக்கெல்லாம்பற்பமாகும் - உண்ணவே லேகியங்கள்கிருதம்என்
ணெய் உத்தமனே பவிழ்தமென்றவகைகட்கெல்லாம் எண்ணவே பண
விடைதான்கூட்டவேண்டும் இல்லாவிட்டால் அவிழ்தமதுவீரில்லாதே()

இல்லாதநோய்கள்தான் சடத்தில்மேவும் - ஏதென்றால் பஞ்சபா
தகத்தால்காணும்பொல்லாதகர்மவினைதீரவேண்டிப்பூட்டுகிறேன்சா

ந்தியொன்றுசொல்லக்கேளு-வல்லான ஓடுநீர்கலசந்தன்னில்வளமாக க்கொண்டுவந்துதர்ப்பைப்போட்டு- செல்லானகலசத்தை மேலே வைத்துசெயலான *அக்குமணிசேர்த்துக்கட்டே ... (௯௭௨)

* அக்குமணி-பலகறைமணி.

கட்டப்பாமாவிலையைமேலேவைத்து கலவானமஞ்சனேதா னைத்துவப்பி-பட்டானமுக்கோணகலசத்துள்ளே பாங்காகத்தானி ட்டுசிகாரம்நாட்டி,மட்டானநோயாளித்தன்னைத்தானுமன்னவனை முன்னைவைப்பாய்மதியந்தன்னில்-வட்டப்பா தூபமொடுதீபங்கா ட்டி வளமானவில்வமதுநூற்றெட்டாமே ... (௯௭௩)

ஆமப்பாஓமமொன்று அர்ச்சனையுஞ்செய்து அடவாக கலசநீ ர்சிரசில்வார்த்து-தாமப்பாஒருசிரங்கையுள்ளுக்கீந்துதயவாகவில்வ மதுமூன்றுநாள்கொண்டால்-ஓமப்பா* அருக்கன்முதல்சனிநாள்த ட்டுமொடுக்கமாயிப்படியேசெய்தாயானும்-போமப்பாபஞ்சபா தகங்களியாவும்பொல்லாதபிரமைபிணியேவல்போமே (௯௭௪)

* அருக்கன்-ஞாயிறுகிழமை.

நோய்க்கும்பேய்க்கும்ஓமசாந்தி.

போமேதான்ஓமத்தின்சாந்திகேளு பொங்கமுடனைந்துபடி யரிசிக்கொட்டி,ஆமேதான்பச்சரிசிமேலேகேளு அடவானதிரிகோ ணம்வித்துபோட்டு,தாமேதான்றீங்காரமுள்ளேபோட்டுதயவாகு ம்பமைந்தில்தனிநூல்சுற்றி,வாமேதான்சலமதுதானிறையவிட்டுவ ளமானசொர்னமொன்றுகூடப்போடே ... ... ... (௯௭௫)

போடப்பாஇருபத்தைந்தளாயுமாறி பொங்கமுடன்மாவிலை யுந்தேங்காய்வைத்து,ஆடப்பாசந்தனத்தைக் கரைத்துசாத்தி * அ ட்சதையுஞ்சுகந்தபரிமளங்கள்பூசி,நாடப்பாபட்டுவஸ்திரங்கள்சாத் திநலமானபுட்பமர்ச்சனையேசெய்து,சுடப்பாபழந்தேங்காய்த்தா ம்பூலங்கள்இதமானபலகாரமிளநீரில்பாலே ... ... (௯௭௬)

* அட்சதை-மஞ்சளரிசி.

பாலுடனேபானக்கவஸ்துவோடு பரமானம்அவலுடனே * சுத்திியண்டம்,எளுடனேபொரிகடலைசர்க்கரைமாவிளக்குஇதமான வெண்ணெய்பொங்கல்பசும்பருப்பு -,சேலுடனேயித்தனையுமிலை தான்போட்டுசெப்பமுடன்பரிமாறிதூபம்போடு,பாலுடனேஓம குண்டஞ்*சமிதைக்கேளுமைந்தனேமாவிலிங்கம்விளாத்தியாமே.

* சுத்தி-மாங்கிஷிபொறியல்.

* சமிதை-சுள்ளிவிறகு.

ஆமேநீவில்வமொரேட்டிநொச்சி அடவானமாவோடு ஓமம் நெய்யாம்-தாமேநீ-ரம்-அக்கினிநமாவெல்றேதான்- நயவாகசமித் துக்காயிரத்தெட்டோதி-போமேநீயெள்ளுமூந்து கடலைமொச்சை ப்பொரிவானதுவரைபசும்பயற்றிரேடு-வாமேகாராமணியும் *அ ரிகோதும்பை-வளமாகஒன்பதையும் ஓமம்பண்ணே ... (௬௭௮)

* அரி-சரிசி.

பண்ணப்பாதேன்பாலுவஸ்துசுத்திப் பாங்கானபழந்தேங்கா ய்பலகாரங்கள்-நண்ணப்பாஇளநீர்சர்க்கரையானக்கம் - நலமானத யிர்ச்சோறுநெற்பொரியுங்கூட- வண்ணப்பாஅக்கினிக்காகுதியேப ண்ணவஞ்சனையுமுறைப்பாடிந்தேவர்குற்றம்- ஒண்ணப்பா அசுத்த சுத்தகணமும்பூதம்-உத்தமனேபஞ்சபாதகமும்போமே (௬௭௯)

போமடாபில்லிவஞ்சனையும்ஏவல்- பிரமையொடுவியாதிமுத ல்பசாசுபேயும்- ஆமடாமுனிகறுப்புலாடங்காட்டேரி - அடவான பெய்ச்சிகந்துருவர்மூர்த்தி- தாமடாசாத்தனொடுஇருளனையன் நய வில்லாசப்பாணியிருசலையிக் கொள்ளி-ஓமடாஇவ்வைப்பெருபசாசா றுளும்- ஓமத்தில்கண்டுவிடுங்கண்டுபாரே ... (௬௮௦)

கண்டு*கும்பமைந்துந்தீபதூபங்- கனிவாகத்தான்கொடுத்து சோடசமுஞ்செய்து-டண்டுமுன்னேநோயாளிதனைக்குபட்பா-பா ங்காகக்கலசநீர்சிரசில்வார்த்து- கொண்டுவல்லோஅவிழ்தங்கள்கொ டுக்கச்செய்நீ-குற்றமெல்லாந்தான்தீர்ந்துவியாதிபோகும் தொண் டுசெய்வாரனவோருஞ்சமர்த்தனென்று - தொல்லுலகில்செல்வம தாய்வாழ்வார்தானே ... ... ... ... ... ... (௬௮௧)

* கும்பம்-கலசம்.

கழிப்புச்செய்யும்விதம்.

தானென்றகழிப்புக்குச்சொல்லக்கேளு- நயவாகபச்சைமாப் பாவைச்செய்து-வானென்றபுதுமுறத்துக்குள்ளேவைத்து-வளமா கஆபரணந்தன்னைப்போட்டு - கோனென்றமுப்பத்திரண்டு நீடங் குறையாமல்நவரத்நஞ்சொர்ணம்வைத்து-வானென்றவஸ்திரங்கள் பரிமளங்கள்சாத்தி-மைந்தனேசுகந்தபுஷ்பம்வாடைதூவே ௬௮௨

இரத்தசாமுண்டிசக்கரம்.

தூவடாரத்தசாமுண்டிசக்கரந்துலங்கவேபாலவமுன்னேஎண் கோணம்போட்டு-மாவடாதாவெடுத்துரேகைபோட்டுமைந்தனே

எட்டரையில்கரியேதூவு - நாவடாநாலரையினுட்கோணத்தில்- நல
மானதிருச்சூரணந்தன்னைத்தூவு-வாவடாஉட்சதுரம் மஞ்சள்தூவு-
வளமானமுக்கோணம் பச்சையாமே ... ... ... (௫௮௩)

ஆமேதான்முக்கோணம் ஸ்ரீங்காரம்போட்டு - அடவானநால
ரையில்-அம்-ஒம்-தும்-மென்று - தாமேதான்நாலரையில் ஓங்காரம்
கட்டி - தலைசுழித்துசூலமிட்டுதயவதாக வாமேதான்கருப்புவண்ண
அரைகளெட்டு - வளமாக - அ - ஆ - இ - ஈ - உ-ஊ-எ-ஏ-என்ன-
போமேதான்யெட்டுமூலைசூலம்போடு பொங்கமுடன்கலபமுதல்
சுகந்தஞ்சாத்தே... ... ... ... ... ... ... (௫௮௪)

சாத்தப்பாஎட்டு மூலைச்சக்கிரத்தில்மூன்று - சார்வானபழந்
தேங்காய்தாம்பூலங்கள்-மாத்தப்பாபலகாரவகையுடன்னம்- வஸ்து
சுத்திகடலைபொரியன்டத்தோடு போத்தப்பா இளநீர்தேன்பானக்
கப்பால்பொங்கமுடன்மஞ்சள்நீர்கரிதண்ணீரு - ஏத்தப்பாகடலை
மொச்சைபயறுசுண்டல் - இதமாகவெண்ணெயுஞ் சர்க்கரையும்
வையே... ... ... ... ... ... (௫௮௫)

வையப்பாபச்சைமாவிளக்கேற்று-வளமாக இத்தனையும்முன்
னேவைத்து-கையப்பாபுருப்பானைவாயைத்தட்டி - கனிவான சுண
ணாம்பைமேலேபூசி-பையப்பாகரிபொட்டுமேலேகுத்தி- பாங்காக
புருங்கரிசிசோற்றைப்போட்டு- மையப்பா உழுந்தோன்றபருப்பு
ங்கூட-மைந்தலேகத்திரிக்காய் கருவாடாமே ... (௫௮௬)

ஆமேநீமுருங்கக்காய் மொச்சைச்சாறு - அடவானபுண்ணாக்
குக்கீரையோடு-வாமேநீவஸ்துவுடன்சுத்திகூட- வளமானபஞ்சவண்
ணச்சோறும்வைத்து - தாமேனீபழந்தேங்காய் தாம்பூலஞ்சுற்றி-
தயவாகஒட்டிலிட்டுபாவைமுன்பு போமேனீ யெட்டிமாவிலிங்கம்
ரண்டும்பொங்கமுட*நிம்பஎண்ணெய்நெய்முளகாயாமே (௫௮௭)

* நிம்பஎண்ணெய்-வேப்பெண்ணெய்.

ஆமப்பாசொர்னபுஷ்பமவர்க்குவைத்து- அடவானதீபமொடு
தூபங்காட்டி- தாமப்பாசோடசோபசாரஞ்செய்து- தயவானவை
வேத்தியமானபின்பு - வாமப்பாபாலவயைத்தான் தலையைச்சுற்றி-
வளமாக ஒட்டையுந்தான் தலையைசுற்றி - போமப்பாகாடுதனில் ம
யானந்தன்னில்-பொங்கமுடன் மூப்பலியுங்கொடுத்துவையே ...()

வைத்தவுடன்பில்லிசூனியங்கள்யேவல்- வலுவானபேய்பூதங்க
ளுப்புமாடன் இத்தமுடன்முனிவீரன் இருள்காட்டேரி - இதமான

மனுக்குடனேசென்னு பீரும்-பத்தவுடன் பிரமராட்சதையும்பேயு
ம்-பாங்கானசாத்தனொடுமொட்டான்பின்னும் - கத்தவுடனிருதலை
யின்கொள்ளிபோம்- கருமூறையுந்தேவதைகளோடிப்போமே ()

சிதம்பரமெழுதிக்கட்ட

போமேனிசிதம்பரத்தையெழுதிக்கட்ட - போருமடாநோய்
பிணியும்பஞ்சபாவம் - ஆமேனிபிராமணர்க்கு அன்னம்போடுஅபி
ஷேகம்சங்கரர்க்குதீபம்ஏற்று- தாமேனிமயேஸ்பரற்கு பூசைசெய்
நீ தயவுடனேநந்திக்குசலத்தைவாரு-வாமேனி அரசுடனேவேம்பு
சுற்றிவயிரவர்க்குவடமாலைச்சாத்தநன்றே ... ... (௬௬௰)

பில்லிவஞ்சனைநோயுந்தீர்ப்பதற்கு
கிரியை.

நன்றானபில்லிவஞ் சனையும்நோயும் - நாயகனேதீர்ப்பதற்கு
சொல்லக்கேளு-குன்றுதமாவிலிங்கங்குப்பைமேனி-குணமாகமூட
க்கற்றான்இதுதான்மூன்று - பண்டாகவகைவகைக்கு பலம்பத்தாக
பாண்டத்திலதனைவிட்டுதுாணிநீரில் - துண்டாகவேகவைத்து விரல்
பொறுக்கதும்பைமலர்மேலிடவேபிணிகள்போமே... ...(௬௬௧)

வேறு தண்ணீர்.

போமேநீபூவரசு ஆவின்பட்டை - பொங்கமுடன் கடப்பன்
பட்டைமூன்றுமாக - ஆமேநீவகைவகைக்கு பலந்தான்பத்து அட
வாக துாணிநீர்தண்ணீர்காச்சி - தாமேநீ மேலிடவே பிணிநோய்
தீருந் தயவானபில்லிவஞ்சனையுந்தீரும்- போமேநீஅறுகம்புல் சம்
புகோரை-புகழ்பெறவேமூன்போலேபிணிகள்போமே... (௬௬௨)

ஏவல்தீர்க்க.

போமடாகண்டங்கத்திரியின்மூலம் பொங்கமுடன் காட்டுச்
சீரகத்தின்மூலம்- வாமடாபிரமராசதையின்மூலம் - வகைவகைக்கு
பலம்நூறுநிறுத்துக்கொண்டு தாமடாவெவ்வேறு பாண்டத்திட்டு
தயவானதுாணிநீர்தன்னைவார்த்து நாமடாவெந்திறக்கி தினமொன்
றாகநலமாகத்தான்வார்க்கஏவல்போமே ... ...(௬௬௩)

இரத்தசாமூண்டிமந்திரம்.

போமப்பாரத்தசாமூண்டிமந்திரம் - பொங்கமுடன்மூன்று
கசொல்லவில்லை ஆமப்பாஓம் ரியும் ரத்தசாமூண்டி அரு அரு மடி
மடி சித்தி குரு குரு சுவகாவென்று அடவாக சக்கிரத்திலாயிரந்
தானேரு நாமப்பாபில்லிவஞ்சனையும்நோயும் நலமானதேவரோடு
கணங்கள்பூதம் வாமப்பாபஞ்சபாதகங்கள்யாவும் வலுவானராட்ச
தையும்விலகுந்தானே ... ... ... (௬௬௪)

## புலிப்பாணி ஜால.

### ஆடாதபேய்-ஆட

தானென்றபேய்மிரட்டியிலையின் சாறுந் தலைப்பின்னிக்கொடி சாறுஞ்சமனாய்ச்சேர்த்து- பானென்ற இவையுடன் சாம்பிராணி சேர்த்துப்பாங்காகபுகைப்போடேபசாசுஆடும்-கோனென்ற -ஓ-வா வா-வென்றுஓத கொற்றவனே பூதமெல்லாமாடும்பாரு- தேனென் றபோகருடகடாட்சத்தாலே தெளிவாகப்புலிப்பாணிபாடினேனே

### கண்கள்பில்லிவஞ்சனை போகதீபம்

டாடினேன்மேனிடுவர்*முட்டையோடுபோங்கானகழுதையுட் தன்டுங்கூட்டி - நாடினேன்கருச்சீலைதனில்சுருட்டி நற்கழுதைநெய்யாதல்வேப்பெண்ணெயாதல்- கூடினேன்கிரசோடுகிளிஞ்சியாதல்குணமாகதீபமிட்டுபார்க்கும்போது- ஓடினேனென்றுசொல்லிக்கணங்கள்யாவும் உத்தமனேபில்லிவஞ்சனையும்போமே... (௫௯௬)

* முட்டை-எருமுட்டைமிநாறி.

### பயித்தியத்திற்கு.

போமடாகோசலமும்பசுவின்பாலும்பொங்கமுடன்கரிப்பான்சார்முசுமுசுக்கை-தாம்டாவகைவகைக்கு படிதாமொன்றுதயவானஎள்ளெண்ணெய்படிதானொன்று - ஆமடாகடுகுபதந்தன்னிற்காய்ச்சி அடவாகமூழ்கிவா பிர்மைபித்தம் சாமடாபயித்தியஞ்செய்வினையுந்திருஞ்சற்குருவாம் போகருட கடாக்ஷந்தானே...(௫௯௭)

### சகலபேய்க்குங்குளிசம்.

தானப்பாபிரமராட்சதையின்பூடு-தயவாகவெள்ளிநூல்காப்புக்கட்டி - வானப்பாபஞ்சவன்ண நூலினாலே வளமாகத்தான்கட்டிகோசலத்தைவாரு-மானப்பாஎட்டுநாளந்திசந்தி மைந்தனேவார்க்கையிலேதியானமோது - ஆனப்பாஅரிபிரமராட்சதை நீயென்று ஆநந்தவல்லியென்று நூற்றெட்டோதே ... ... (௫௯௮)

ஓதடாமுப்பலியும்பொங்கலிட்டு உத்தமனேநடுச்சாமந் தன்னில்தானும்-வாதடாநிருவாணரூபங்கொண்டு வண்மையுடன் ஆணிவேரறுமல்நீயும்ஆதடாயெடுத்துவந்துகுளிசங்கட்ட அடவானபிரமராட்சதையுமேவல் - நாதடாமுனிகருப்புபேயும்பூதம் நலமான தேவனோடு ஓடிப்போமே ... ... [illegible])

## பேய்பூதம் ஓடிப்போக-மை.

போமடாஇன்னமொருமையைக்கேளு பொங்கமுடன்பன்றியுடமூஞ்சியொன்று- ஆமடாநாய்ப்பல்லுபுலியுண்ணுக்குஅடங்கமுதைமண்டைகரும்பூனையிரல்- வாமடாமனுஷர்மலந்தட்டிச்சிலைவளமாகவொருக்கியப்பாபாண்டத்திட்டு-தாமடாகுழித்தயிலமாவாளை *காஷ்டத்தாலெரித்துக்குப்பியிலேஅடைத்துக்கொள்ளே...(௬௰)

* காஷ்டம்-விறகு.

கொள்ளப்பாமயானத்தில்பாழ்வீடாதல் கோரிவிட்டுகுட்டிச்சுவர்தன்னிலாதல்- வள்ளப்பாவஸ்துடனே நெற்பொரியும்வைத்து வளமில்லாஎருக்கம்பூஅரும்பினாலே - மெள்ளப்பாநூற்றெட்டுவுருதானோது-மேன்மையாய்அக்காலைதியானித்துநீ-அள்ளப்பா, தூம், தூம், தூசி, தூசி, சீ, சீ, போ, போ, வென்று-அடைவாகதயிலத்தினருமைபாரே... ... ... ... (௬௰௧)

பாரேநீதிலர்தமிடப்பில்லிவஞ்சனைப் பறக்குமடாதேவரொடுகணங்கள்பூதம்-நேரேநீமுனிகருப்புபேய்பசாசு நேரில்லாசெய்வினையும்பயித்தியந்தீரும்-சீரேநீநெரிகட்டால்வாசல்மேலே செயலாகப்பொட்டிட சொற்பனங்கள்கோடி - வேறேநீவெடியுப்புக்கில்தடவினுக்கால் வீரானகுழிமுகந்தாம்சொல்லநன்றே ... (௬௰௨)

சொல்லானவெட்டப்பிருந்தபொட்டினாலேசொற்பெரியசொற்பனங்கள்தீரவேண்டில் - அல்லானப்பொட்டைமிகச்சுரண்டியப்பாஅடவாகமுறந்தனில்லேசிந்தாமல்தான்- வல்லானசாணியிட்டுமெழுகிநன்றாய்வளமாகப்பசுவின்பால்கொண்டுதெய்நீ- சொல்லானவல்லாங்கால் படாநிலத்தில் சூளையாய்க்கொட்டிவிடுசொற்பனங்கள் போமே ... ... ... ... (௬௰௩)

## அக்கினிபிளாஸ்திரி.

போமென்று அக்கினிபிளாஸ்திரியைக்கேளு பொங்கமுடன்மெழுகதுவும்விராகன்பத்து- ஆமென்றுபாண்டத்திலிட்டுமைந்தா அடவாகவீரமைந்துபொடித்துப்போடு- தாமென்றுவுருகையிலே விளக்கெண்ணெய்விட்டு தானுருக்கிவடிகட்டிசலத்தில்வாரு-வாமென்றுதனையெடுத்து சிமிழில்வைத்து வளமாகச்சல்லாமேல் தடவிவையே ... ... ... ... ... ... (௬௰௪)

தடவியே கைக்கால்குத்தெறிக்குந்தேகந் தயவாகஎலுமிச்சம்பழச்சார்பூசி- அடவியேசாரத்தைப்பொடித்துத்தூவி அடவானபிளாஸ்திரியைஅளவாய்ப்போட்டு - மடவியேகட்டிடவேபொறுக்கொண்ணா மயக்கமுஞ்சோபங்கண்டாலவிழ்த்துப்போடு-கடவியேகொப்பளித்துசலமதாகுங்கத்திரித்துவிட்டுவிடுநீருபோமே ()

### இரணமாறுகிறபிளாஸ்திரி.

போமேநீவலிக்குத்துத் தீர்ந்துபோகும் பொங்குமுடன்ரண
மாரப்பிளாஸ்திரிசொல்வேன்- ஆமேநீவெள்ளையென்றகுங்கிலியந்
தன்னே அடவானமெழுகுடனேசமனுச்சேர்த்து- வாமேநீயாண்டத்
திலுருகும்போதுவளமானதேங்காயின்நெய்யைவார்த்து-தாமேநீ
யுருக்கிவடிகட்டிநீரில் நலமாகத்தான்வார்த்துஎடுத்துக்கொள்ளே()
கொள்ளப்பாசிமிழில்வைத்துப்பதனமாகக் கொற்றவனேசல்
லாவஸ்திரத்தில்பூசி- அள்ளப்பாஅனல்தனிலேகட்டிகட்ட அடவில்
லாரணங்களெல்லாமாறிப்போகு- மெள்ளப்பாசிரங்குபுண்ணில்பி
ளாஸ்திரிப்போட மேன்மையாய்யொடுங்கியது உதிர்ந்துபோகும்
தெள்ளப்பா போகருடகடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி
பாடினேனே... ... ... ... (சாஎ)

### பிளாஸ்திரி.

பாடுகிறேனின்னமொருபிளாஸ்திரிக்கேளு பாங்கானவிளாம்பி
சினுங்கருங்குங்கிலியம்- நாடுகிறேன்சமன்கொண்டுவுருகும்போது
நலமானவிளக்கெண்ணெய்க்கூடவிட்டு- ஆடுகிறேன்வடிக்கட்டிக்கல
சந்தன்னில் அடவாகத்தானடைத்துத்துணியில்பூசி- சூடுகிறேன்ரண
ங்கள்மேல்ப்போடஆறும் சுகமாகஅனல்காட்டிப்போட்டிடாயே(
போட்டிடவேஇன்னமொருபிளாஸ்திரிசொல்வேன் புகழ்பெ
ரிய * மரத்துவெள்ளைப்பலந்தானைந்து - கூட்டிடுவாய் பூரவிடை
விராகனைந்து கூட்டியேதானரைத்துபொடியாச்செய்து - மாட்டி
டுவாய் தேங்காயெண்ணெயாலே மைந்தனே தானரைத்துத்
தண்ணீர்விட்டு ஆட்டிடுவாய்த் * தவளம்போலாகுமட்டும் அப்ட
னேபுன்மேலே போடப்போமே ... ... (சாகூ

* மரத்துவெள்ளை-வெள்ளைகுங்கிலியம்.

* தவளம்-வெள்ளை.

### மேகராசாங்கத்தெண்ணெய்.

போமென்றமேக ராசாங்கத்தெண்ணெய்ப் பூட்டுகிறேனவ
ருகபுகலக்கேளு-எமென்ற * எரண்டத்தெண்ணெய்படி நாலுயித
மாக * ஈருள்ளிச்சாறுபடிவிரண்டு - ஆமென்றகழுதைலத்திச்சாறு
படிரண்டு அடவாகவரிக்குமட்டிச்சாறுபடிரண்டு - வாமென்றக
யான்புளியாரைசங்குவல்லாரைப் பிரமிபொம்தலை செருப்படியே

* எரண்டத்தெண்ணெய்-ஆமணக்கெண்ணெய்.

* ஈருள்ளி-வெங்காயம்.

படியானகருநொச்சிப் பொன்னாங்காணி பாரிறுஆதொ
ண்டைக்* கிரந்திபூண்டுசெடியானவெள்ளறுகுசிவனார்வேம்புசெயு
லானவகைக்குவகைப்படிதான்ரண்டு- கெடியானச்சாரொக்லாபெ

டொன்றுக்கி கெணிதமாய்வேருவகைச்சொல்லக்கேளு- பிடியான கொடிவேலி பூவரசன்வேரும் பொங்குநிலவாலக * சுடுதாரத்தம் வேரோ... ... ... ... ... ... (௬௰௧)

* கிரந்திபூண்டு-கிரந்திநாயகம்.

* சுடுதாரத்தம்-சித்திரபாலை.

வேரான *கிளிமூக்கின்கிழங்கிரேறுவிதமான அப்பைவிடகிழங்குங்குப்பி- சீரானவகைவகைக்குப்பலமதாகச் சேர்த்திடித்துக்குறணிநீரொட்டொன்றுக்கி - காரானஎண்ணெயிலே விட்டுமைந்தா கடைசரக்குஇதிற்போட கருத்தாய்க்கேளு - போரானசாதிக்காய்க் கிராம்புஏலம் பேதமில்லச் சிறுலவலங்கப்பட்டைமிளகே (௬௰௨)

*கிளிமூக்குக்கிழங்கு - கற்றாழைக்கிழங்கு.

மிளகுடனே அதிமதுரங்கோஷ்டந்திப்பிலிமிதமானதிப்பிலியின்மூலத்தோடு - அளகானவெண்காரங்குராசாணியோமம் அடவானதாளிக்காய்கடுக்காய்காயம்- களகானகாரியசீரகங்கார்ப்போகங்கஸ்தூரிஅரத்தைசுக்கு அதிவிடயமக்கிராகாரம் புளகானகடுகுரோகணியுமாஞ்சில் பொங்கமுடன்தாளிசபத்திரியுமாமே.(௬௰௩)

ஆமென்றகசகசாஓமங்கஞ்சா அடவானவலம்புரிக்காய் பரங்கிப்பட்டை-வாமென்ற*செருமரப்பட்டை போடு வளமானவாலுமூலவசிறுநாகப்பூ- ஊமென்றதக்கோலம் வசம்புசுக்கு உத்தமனேயபினிவசுவாசிசீரம் போமென்றயானைத்திப்பிலி குங்குமப்பூபொங்கமுடன்வாளஞ்சேங்கொட்டைத்தானே ... (௬௰௪)

* செருமரப்பட்டை-அழிஞ்சிப்பட்டை.

தானென்ற எவச்சாரஞ் சத்திச்சாரந் தயவானநவச்சாரஞ்சாஸ்திரபேதி ஆனென்றவகைவகைக்குவிராகனெடு அடவாகப்பொடித்துநீஎண்ணெய்தனிற்போட்டு வானென்றமெழுகுபதந்தனிலிரக்கிவண்மைபெறகணபதியைப் பூசைசெய்து தேனென்றகுருபதத்தைமனதிலுன்னிதென்புபெறஒருகரண்டியுள்ளேகொள்ளே ... ()

கொள்ளப்பா அந்திசந்திகொண்டபோது கொடிதானபத்தியந்தானெதுவுமாகதெள்ளப்பாமூன்றுநாளாறுவேளை தெளிவாகஎட்டாநாள்நீவாரு - மெள்ளப்பாமிருத்தஉப்பும் பருப்புமாகுமென்மையால்மற்றுநாள்புளியைக்கூட்டுகுள்ளப்பா கிரந்தியரையாப்புச்சூலைசுகமில்லா விப்புருதிகண்டமாலைப்போமே ... (௬௰௬)

போமேநீயிருபத்தோர்மேகமுந்தானும் பொங்குகின்றகுஷ்டமொடுசோகைப்பாண்டு - தாமேதான்கழல்வாதம் அண்டவாதந்தயவில்லாகால்வாதம்பச்சைவாதம் - ஆமேதான்பவுத்திரமு மூலப்புற்றுஅடவானமண்டைகுலைவாயு-தீமேநீரணங்கொடு குலைதிரும்திறமானபேர்க்குடகடாட்சத்தானே ... (௬௰௭)

ஐந்தெண்ணெய்த்தைலம்.

தானுன எள்ளெண்ணெ யேரண்டத்தெண்ணெ நயவானஇலுப்
பெண்ணெவேப்பண்ணெதான் - மானுனபுங்கெண்ணெ யைந்துந்தா
னும்மைந்தனேவகைவகைக்குப்படிதானென்று - தானப்பாண்ட
த்திலளந்துவிட்டுநயவாகக்கியாழூட்வகைச்சொல்லக்கேளு - கோனு
ன ஆதொண்டைமூலம்பத்திரி கொற்றவனே செய்புடைய மூலங்
கேள ... ... ... ... (சாயஅ)

கேளேநீகழுதாழை காட்டாமணக்கு செணிதமாய்த் திருகு
கள்ளிவேளைமேனி-நாளேநீமாவிலிங்கம் ஆலிநொச்சிநலமானவேம்
புபுங்குவெள்ளைநொச்சி - சூளேதான்கொடிவேலி கார்முருங்கைச்
சங்குசுகமாகஊர்முருங்கைதூதுவேளா-வாளேநீமாட்டைமூலி
கைதான்மூலம் வகைவகைக்குப்பலமைந்து நிறுத்துக்கொள்ளே()

கொள்ளப்பாஇவையெல்லாமிடித்துப்போட்டுகுணமாகதூணி
நீர்எட்டொல்முக்கி-தொள்ளப்பாஎண்ணெயிலேயிருத்துவாருதெ
ளிவாகசரக்குவகைசொல்லக்கேளு- மெள்ளப்பாஅரத்தைசுக்குஓம
ந்திப்பிலிமேன்மையாய்த்திப்பிலியின்மூலத்தோடு- அள்ளப்பாஆ
தினைப்பிலியுங்காயம் அடவாககருஞ்சீரகஞ் சதகுப்பைத்தானே()

தாமென்றதேசவரங்குராசாணி*யுள்ளி நடவாக * வெளிச்சி
யென்றபிசினியோடு- வாமென்றவசப்புடனேதேக்குஇஞ்சி மைந்
தனேசடாமாஞ்சில்கிராம்பு*குக்கில்-தேமென்றவகைவகைக்குபல
ங்காலாகதெளிவாகஅரைத்திட்டுஎண்ணெயிலேபோட்டு- காமென்ற
மெழுகுபதந்தவிறிற்காய்ச்சி கணபதிக்குப்பூசைசெய்து யெடுத்
* உள்ளி-வெள்ளைப்பூண்டு. [துக்கொள்ளே (சாஉக)

* வெளிச்சி-விளாம்பிசினி. * குக்கில்-மய்சாட்சி.

கொள்ளப்பாதயிலங்காசிடைதானூண்டுகுணமாகமேலெங்கு
ம்பூசினக்கால் - கள்ளப்பாசன்னியெங்கேதோஷமெங்கேகழிதான
வலிப்பேழும்அண்டவாதம் - சுள்ளப்பாவாதமென்றவகைகளெல்
லாஞ்சுழன்றெழுந்துஓடிவிடுமெதிர்நில்லாது- மெள்ளப்பாமூன்று
நாளாறுவேளை மேன்மையாயேழாநாள்நீராவாரோ (சாஉஉ)

விஷமுட்டித்தயிலம்.

வாமோதான்விஷமுட்டிதைலமொன்றுவளமாகச்சொல்லுகிறே
னயீறாய்க்கேளு - சேமோதான்யோமிஞ்சிவெட்டிச்சங்கு செயலா
னவன்னிபுங்கு*வண்டுசொல்லி-சாமோதான்சங்கங்குப்பிகடம்புசின்
னிசார்வானவெள்ளறுகுஆவிப்பட்டை- தீமோதான்மருக்காரைஇண்
டுக்கொத்தான் திறஞ்சென்னுயுருவிகாஞ்சோரியாமே... (சாஉங)

* வண்டுசொல்லி-செண்பகம்.

ஆமேதான்குன்றிமணிகருத்தகண்ணி ஆவாரைசிவன்வேம்பு
மூலைமுள்ளி - தாமேதான்* மருதோன்றிபுரசுகருங்காலி[illegible]

புடாத்தியொடுகிளுவைவாகை- போமேதான்புனலின்டு கருவூமத்
தை பொங்கமுடன்கொடுவேலிமூத்தக்காசு-வாமேதான்அமுக்கரா
விடத்தேறும்பூ வரசுடனே *சின்னப்பலாக்*குமரித்தானே (௬௨௪)

* மறுந்தான்றி-ஐவன்னி.

* சின்னபலா-குட்டிப்பலா *குமரி-சோற்றுக்கற்றாழை.

தானானமிளகரணைக் கொன்றையாத்தி தயவான கழல்கொடி
புஞ்செங்கத்தாரி-வானான*பெருமரமும்அவிரி*கட்டு வளமாகசம
னறுக்கியுலர்த்திக்கொண்டு - பானானக்குழித்தயிலமாகவாங்கி பக்
குவமாய்த்தானெடுத்துப்பதனம்பண்ணு-மானானசிவசெந்துவலை
யைச்சொல்வேன்மைந்தனே முஞ்சூறுகருங்காகமாமே..(௬௨௫)

* பெருமரம்-தலைசுருளி *கட்டு-கட்டுக்கொடி.

ஆமேதான் யழுங்கோடு கழுகுஆமை யாந்தை அடவு *பச்
சோந்தியும்*கூகைதேவாங்கு-தாமேதாம் பசுந்தவளைப்பெருவிரிய
ன்தயவானமனுஷிஒண்டைகழுதைமண்டை- போமேதான் *மேதி
க்கொம்பு*பரிக்குளம்பிநோடு பொலியானைலத்திமுதல் புழுக்கை
தானும் - வாமேதான் வொட்டகத்தின் லத்திக்கூட வன்பன்றிக்கழு
தையுடலத்திதானே ... ... ... (௬௨௬)

* பச்சோந்தி-பச்சைஓணான்.

* மேதிக்கொம்பு-எருமைக்கொம்பு.

* கூகை-கோட்டான்.

* பரிக்கொழுப்பு-குதிரைக்கொழுப்பு.

தானப்பாவெள்ளாட்டுப்புழுக்கையோடு தயவாக சமன்கொ
ண்டுஇடித்துலர்த்தி-பானப்பாக் குழித்தயிலமாகவாங்கி பாங்கான
இருதயிலஞ்சமனாய்ச்சேர்த்து- கோனப்பாசெங்கொட்டைத் தயி
லமலாப்படி கொற்றவனே தயிலத்தின்கூடவாரு-வானப்பாகருப்பு
டையகுங்கிலியம் வளர்த்திகையின் *பூட்டுடைய பூச்சித்தானே ( )

* பூட்டு- சூட்சம்.

தானடாகருஞ்சீரகங்கஸ்தூரிமஞ்சள் தனித்தேதான்மாசக்கா
யிரசகற்பூரம்-மானடாசெனாமரப்பட்டையோடு மைந்தனே வகை
வகைக்குப்பலந்தானொன்று-வானடாபரங்கிப்பட்டை பிறப்பலங்கி
ழங்குவளமாகப்பலம்ரண்டுநிறுத்துப்போட்டு- பானடாவலம்புரிக்
காய்கடுக்காயோடு பாங்காகப்பலமொன்றுநிறுத்துக்கொள்ளே ( )

கொள்ளேதான்ஓதியம்பட்டை *கொடியின்சாறு குணமாகச்
சரக்கெல்லாமறைத்துப்போடு-அள்ளேதான் மயிலெண்ணெய் வே
ப்பெண்ணெயிரண்டும் அடவான தயிலத்தில்நேரேசேர்த்து - தள்
ளேநீதுளாவிமிகப்பதத்தில்காய்ச்சி சுகமானகணபதிக்கு பூசைப்ப
ண்ணு-தெள்ளேதான் துவளையிட்டுதேகமெங்கும் தெளிவாகநோய்தீ
ரும்வியாம்பாரே ... ... ... (௬௨௯)

**கொடிசித்திரமூலம்.**

பாரேதான் காசமுடன் க்ஷயமுடமூர்ச்சிரும் பாங்கான சூலைபொ டுகுஷ்டரோயும் - சேரோதான் புடையன் செவ்வட்டைமரவட்டை செய்யான்வண்டுகடியில்விஷங்களையும் - தீரோதான் பூதமுதல்பசாச வேதாளந்திறமானபிரமராட்சதையுங்கூட - வீரோதான்மற்றுநாள் வேறு நண்ணீர்வீரானநோயறிந்து தண்ணீர்வாரோ ... (௩௯)

வாரடா கைப்போடுபுளிபுகையுந்தள்ளு வளமானவுப்பைபதன் றுய்வறுத்துக்கூட்டு - பாரடா பாசிபயர்கொடிக்காலின்பிஞ்சுபாங் காகமுருங்கையுடப்பிஞ்சுமாகும் - கூரடா ஆவின்பால்நெய்யுமாகும் குணமான துவரையுடபருப்புமாகும் - சீரடா வியாதியுட குறியுங்க ண்டுசிறப்பாகபத்தியத்தை தீராக்கூட்டே ... ... (௩௪)

விஷங்களுக்கு மெழுகு.

கூட்டப்பா வரிக்குமட்டி பழச்சார் வாங்கிகுணமாகப் பாண்டத் தில்லைபோல்கிண்டி - மாட்டப்பா சிமிழ்தனிலே யடைத்துக்கொ ண்டு மைந்தனே பசும்பயறுள வாய்த்தானும் மீட்டப்பா நாவுதனி ல்தடவிப்போம் மிருந்ததொரு விஷங்களெல்லா மிறங்கிப்போகும் - ஆட்டப்பா போகருடகடாக்ஷத்தாலே அடவாகபுலிப்பாணி பாடித் தானே ... ... ... ... (௩௫)

அக்கினிமந்தத்திற்கு லேகியம்.

தானேதான் திரிகடுகுஜீரகம் வாய்விளங்கந் தடவாக வகைவகைக் குவிராகளைந்து போனென்ற பொடிப்பண்ணி சர்க்கரை நேர்ச்சேர் த்து பொங்கியதேன் படிக்கால் நெய்ப்படிக்கால் வார்த்து, கோனென் றமைந்ததிலே வைத்துக்கொண்டு குணமாக நெல்லிக்காயளவுகொ ள்ள-வானென்றவாயு அக்கினியின் மந்தம் வாங்குமடா போகருடக டாக்ஷந்தானே ... ... ... ... ... (௩௩)

சுத்தவல்லாதி எண்ணெய்.

தானப்பா சுத்தவல்லாதியெண்ணெய் தயவாக சித்தாமுட்டிமூ லத்தோடு - ஆனப்பா பலமதுருப்பத்திரண்டு அடவாகதானிடித்து இருதூணிநீரில் - பானப்பா நாலிலொன்றாகாய்ச்சி வாங்கிபாங்காக நந் தெண்ணெயொருபடி தான்வாரு - வானப்பா கெத்தி யதிமதுரங்கோ ஷ்டம்வளமாகசாதிக்காய் சாதிபத்திரியே ... .... ... (௩௪)

பத்தான ஏலமுடலவங்கப்பட்டை பாங்கான அரத்தைசுக்கு அக் கிராகாரம் - முத்தானமாஞ்சில் தாளிசையாம்பத்திரி முடிக்கானவாய் விளங்கம் யானைத்திப்பிலிசித்தான திப்பிலிகடுகுரோகணியுந்திருக்கை நீர்வாலின்மிளகுமம் - வித்தான குங்குமப்பூ கருப்புசீரகம் விதமா ன கடுக்காயுந் தான்றிக்காயே ... ... ... ... (௩௫)

காயான செண்பகப்பூ கொத்தமல்லி கருவானவாலுமுலைசிறு நாகப்பூமாயான செவியமதுகழஞ்சிதாலுமைந்தனே பொடிப்பண் ணியெண்ணெயிலே போடுதாயான பழச்சாறுபசுவின்பாலு தயவா

வகைவகைக்குப்படிதான்வாரு-சேயானமெழுகுபதந்தனில்வடித்துசெயமானபுழுகுடனேகஸ்தூரிப்போடே... ... (௬௰௬)

போடேதான்வகைக்குவகைக்கழஞ்சித்தானும் பொங்கமுடன்கணபதிக்குப்பூசைபண்ணு நாடேதான்காசிடைதான் எண்ணெய்க்கொள்ளநாசியிலே யொருதுளிம்மேலேபூச வாடேதான் மூகவாதமண்டைவாதம் சடிதானபித்தமொடுநீலகாசம்-கூடேதான்பீநசமும் வாயுசூலை-சுகமில்லாச்சொரிமுதலாய்த்தீருப்பாரே... (௬௰௭)

பாரேநீமூன்றுநாளாறுவேளை - பாங்காகக்கொள்ளையிலேபத்தியத்தைக்கேளு-சேரோதான்சீயக்காய்வெந்நீர்வாரு-சிறப்பானபசும்பயறுஉப்புங்கூட்டு-தீரோதான்நாலாநாளெல்லாங்கூட்டுநீர்க்கமாயிப்படிமூன்றுகெடுவேகொள்ளு - வீரோதான்சொன்னபிணி தீரும்பாரு-விதயானபோகருடகடாக்ஷந்தானே... ... (௬௰௮)

ஈளைகாசப்பெருமூத்திரத்திரச்சிநீரடைப்புக்கிரிச்சினம்.

பெரும்பாட்டுக்குலேகியம்.

தானுனவரிக்குமட்டி வேர்பலமும்பத்து - தயவானகடுக்காய்வேர்நெல்லிம்வரும்-மானுனதான்றிக்காய்வேரிவேறு- மைந்தனே * அத்திமல்லிகையின்வேரும் - கோனனவெட்டிவேர் வில்வவேரும்குணமானவிலாமிச்சைதூதுவளை * நாரி- மானுனமாதளை * தாங்கிசிறுகாஞ்சோரி-வளமானநெய்தலொடுசெங்கழுனீர்க்கிழங்கே (௬௰௯)

* அத்திமல்லிகை-பத்திராட்சி.

* நாரி-நன்னாரி.

* தாங்கி-மலைதாங்கி.

கிழங்குதகாசமல்லிநிலைப்பனையும் * வாகை - கிருபையுடன்கண்டங்கத்திரியின்மூலம்-புளங்கமப்பா வகைவகைக்கு பலந்தானென்று-போட்டிடித்துதுணிநீரொட்டொல்ருக்கி- விளங்கப்பா பசுவின்பால்படிநால்விட்டு-விதமானசரக்குவகைசொல்லக்கேளுமுளங்கப்பா சாதிக்காய்சாதிபத்திரி-முடியானகிராம்பேலப்வாலுடையமிளகே

* வாகை-நிலவாகை,

மிளகானசிறுலவங்கம்மந்திஷ்டிகோஷ்ட- மிகுந்தநல்லசந்தனமும்கரியசீரம்-அளகானசதகுப்பைவாய்விளங்கம் - அடவானசாஸ்திரமாம்பேதியோடு-புளகானதாளிசபத்திரிதேவதாரம்-புனிதசீரகமிளகுசிறுநாகப்பூ-இளகானஅதிமதுரம் * காஞ்சினியும்- ஈமவாலுழுவைதேக்கு * சிங்கியாமே... ... ... ... (௭௰)

* காஞ்சினி-மஞ்சள்.

* சிங்கி-கடுக்காய்ப்பூ

ஆமேதான்கஸ்தூரிமஞ்சலோடு-அடவானதிப்பிலியுந்திப்பிலியின்மூலம்-போமேதான்ரோகணியும்நெரிஞ்சில்முள்ளு - பொங்கமுடன்கோரசாணிமுத்தக்காசு நாமேதான்கடுக்காயுந்நெல்லிக்காயு

ந்தயவான குங்குமப்பூமாதளையின்பிஞ்சு- வாமேதான்வகைவகைக்
குகழஞ்சிநாலு-வளமாகப்பசுவின்பாலதனாலாட்டே ... (சசஉ)

ஆட்டியேயியாழமதுதல்னிற்போட்டு- அடவாக ஆவின்பால்
நெய்படிநால்விட்டு-நாட்டியேசெவ்விளநீர்பழச்சாறுதானும்-நல
மானவல்லாரைச்சாறுங்கூட-மூட்டியேவகைவகைக்குப் படிதான்ர
ண்டு முசியாதசீனியதுபலந்தாஞ் ரண்டு - கூட்டிநல்லவெல்லம்ப
லந்தானு ஒன்கூடவிட்டும்மெழுகுபதந்தன்னிற்காச்சே... ... (சசங)

காய்ச்சியேயவாகட்டிக்கலசத்திட்டு - கணபதிக்குப்பூசைசெய்
தெற்புடந்தாஞ்திங்கள் ஆச்சியேயெடுத்துநீ வைத்துக்கொண்டு அ
டவாகமுக்கழஞ்சி அந்திசந்தி - தாச்சியேகொண்டிடவேயிளைகாச
ந்-தயவில்லாதவைநடுக்கப்பித்தமேகம் - ஆச்சியேவலிப்போகுகல்ல
டைப்புஅணவில்லாமூத்திரத்தின்கிரிச்சியோடு- பேச்சியே பெரும்
பாடுமெலிவுகாந்தல்-பேதமில்லாநீர்ச்சிறுப்புவாயுபோமே. ()

போமடாமலடிக்குப்பிள்ளையுண்டாம்- பொங்கியகைப்புளி
தயிருமாகா- வாமடாநெய்விட்டாலெல்லாமாகும்-வளமானதேகம
துகாந்தியுண்டாம்-பாமடாபவளபற்பம்நெய்யிற்கூட்டி- பாங்காக
க்கொண்டிடவேநோய்களெல்லாம்-தாமடாவகைகறுப்புமாறிப்போ
கும்-தயவானபோகருடகடாக்ஷந்தானே ... ... ... (சசரு)

பிநசத்துக்குஎண்ணெய்.

தானேப்பாபிநசத்துக்கெண்ணெய்கேளு - தயவாகஎள்ளெண்
ணெய்ப்படிதானிரண்டு-வானப்பாகரிசாலைபான்றுங்காணிவளமா
னவெற்றிலையுரிமுசுமுசுக்கை- மானப்பாமூக்குரட்டைஅத்திப்ப
ட்டை மைந்தனேவகைவகைக்குப் படிசாரிவிட்டு - கோனப்பா ஆ
தொண்டை யிலைச்சாறுதானுங் - கொற்றவனேபடியிரண்டளந்து
வாரே ... ... ... ... (சசகு)

வாரப்பாபிநசமாம்பூண்டுமூலம்- வகையுடனேஇடித்தச்சார்
படிதானொன்று - வீரப்பாபசுவின்பாற்படிதானொன்று - வித்தக
னேயறிப்பேர்நிவேகும்போது-சீரப்பாயிளகுடனே கஸ்தூரிமஞ்
சள்- சிறுகடுக்காய்நெல்லிவித்துநிம்புவித்துங்-காரப்பாகருஞ்செம்
பைப்பூவுந்தானுங்-கனமானவகைவகைக்குப்பலந்தான்வாங்கே ()

வாங்கியேபொடித்திட்டு முன்னெயிற்றாவி வகையுடனேமெ
ழுகுபதமானபோது-தூங்கியேபோகாதேயிறக்கிக்கொண்டு- தூய்
யமிகுங்கணபதியைப்பூசைசெய்து தீங்கில்லாதைலமதைதினமுநா
ன்கில்-தீவரமாய்மூழ்கிவாதிரும்ரோகம்-ஏங்கியேதிரியாதேபுளிப்பு
வகைப்பு- எள்ளெண்ணெய்மாங்கிஷிமுமீறுகாதே ... (சசஅ).

ஆகாது*விடையங்களாகாதப்பா - அப்பனேவுறுத்தஉப்புது
வலையாகும்-வேகாதபண்டங்களொன்றுமாகா-வெந்நீருமுருங்கை
க்காயவரைப்பிஞ்சும் நோகாதவழுதலங்காய்வந்தலாகும்நோயாளி

கண்டறிந்துபத்தியஞ்செய்தாற் - போகாதபிரநசங்கள்பறந்துபோ
கும்போகருடகடாக்ஷத்தாற்பாடினேனே ... ... (௪௪௯)

* விடையங்கள்-பெண்போகம்.

மேகரணங்களுக்குதிப்புகை.

பாடுவேன்மேகமென்றரோகந்திர-பாரிலுள்ளபண்டிதரோபக
ரக்கேளு-நாடுவேன்பூரமதுவிராகனென்றுநலமான *சூதசெந்தூர
மொன்று-கூடுவேன்தேன்மெழுகுபலமோகானு- குறியாககரண்டி
யிலேஉருக்கிக்கொண்டு- ஆடுவேன்முன்சரக்கை பொடித்துத்தூவி
அப்பனேஇறக்கியைத்துத்திரியிலூட்டே ... ... ... (௪௫௰)

* சூதசெந்தூரம்-ரசசெந்தூரம்.

ஊட்டியேரோகிதனை அறையில்வைத்து- உத்தமனேதிரியொ
ன்றைதீபமேற்றி-நாட்டியே * கன்சிரட்டைஎதிரில்வைத்து- நலம்
பெறவேரோகியின்மேல்போர்வைவிட்டு நாட்டிகமாய்த் திரியெரி
ந்துஅணையுமட்டுந்-தானிருந்துவேர்வைஎல்லாந் துடைத்துப்போ
ட்டு- ஆட்டியேஆவின்பால்உழக்குள் தந்து அப்பனேபாலன்னம்பி
ன்னுற்கொள்ளே ... ... ... ... (௪௫௧)

* கன்சிரட்டை-கல்கொட்டாங்கச்சி.

கொள்ளவேஉப்பாகாமூன்றுநாளுங் - குணமாக பாலன்னம்
கொள்ளவேண்டுந்-தள்ளவேமற்றொன்றுமாக தப்பா- தன்மையுட
ன்நான்காநாள்வெந்நீரோடு-மெள்ளவேநீருமுள்ளி சமூலங்கொண்
டுமிதக்கவிட்டுகாய்ச்சியபின்னுரவிட்டு - அள்ளியேஓமமிட்டுவாதி
வார்த்துஅப்பனே *செம்மறியின்மிளகுநீரே ... (௪௫௨)

* செம்மறி-செம்மறியாடு.

நீரிலேமிளகாகுமுப்புமாகும்- நிட்சயமாயன்றுதொட்டுக்கா
ரசார-மாரியேநெய்யோடுபாலுமாகும்- மைந்தனேஆட்டிறைச்சி
மச்சமாகும்-பாரினிலேபெண்ணுகாபுளியுமாகா- பாலகனேவொய்ந்
லாஆற்றலாகா,வீரியமாயிருபதாநாளோமந்தேய்த்து- விருப்பமு
டன்விளக்கெண்ணெய்முப்பதிலேமுழுகே ... (௪௫௩)

முப்பதுடன்பத்துநாளாகுமுன்னே- முக்கியமாயிருக்கின்ற
வியாதிகேளு-தப்பதுடன்பிரநசங்களேழுந்திருந் - தலைபிளவைஉச்
சிபுற்றுக்கண்டமாலை- கப்பதுடன் கன்னபுற்றுலிங்கப்புற்று-கனமா
னஅண்டபுற்றுயோனிபுற்று - இப்பதுடன்பல்லரணை சந்தபுற்று-
இயலானமார்பிளவைகொறுக்கையாமே ... (௪௫௪)

போகுமேஅரையாப்புஆசனத்திற்புற்று- பொல்லாதபௌத்
திரங்கள்மேகவடிவுலை-சாகுமேகுஷ்டவெடிதுடையில்வாழை- சல
க்கண்ணிஅழுக்கண்ணிசதைவளர்த்தல் - ஏகுமேதவளைசொறிஆனை
சொறிபீலி-இயவில்லாரணங்களெல்லாமெளிதில்போகும்- ஆகுமே
போகருடகடாட்சத்தாலே- அவனிதனில்புலிப்பாணிஆடினேனே.

அண்ணமெழுகு.

ஆடியேசிற்றண்டமெழுகிதப்பா- அப்பனேசொல்லுகிறேன்
வில்வ*மூலம்- தேடியேவிலைசபத்துக்கொண்டுவந்து - தேர்ந்த
னைநறுக்கயபின்திழுலர்த்தி- வாடியேபோகாதே பாண்டத்திலிட்
டு-வாய்மூடிசீலைசெய்துகுழித்தையிலப்வாங்கி- நீடியேதலைஅண்ட
ப்பீங்காலிலிட்டு நிலவரமாய்தைலமதைநிறையவாமே (௪௫௬)

* மூலம்- வேர்.

வார்த்தபிப்புநாற்பதுநாள் ரவியில்வைத்து- வற்றவற்றதைல
மதைவார்த்துவந்தால்-பார்த்திருந்தபண்டிதர்கள்மாயமாகபசுமை
யுள்ளமெழுகாகும்பகரக்கேளு - தூர்த்துவந்தவாதமெல்லாந்துலை
ந்துபோகுஞ்-சுண்டக்காயளவெடுத்துத்தேனிலீந்நால்- ஆர்த்திருந்
தசூலையெல்லாமாய்ந்துபோகு- மளவாகப்புலிப்பாணிஅறைந்திட்
* இலவணச் செந்தூரம். [டேனே (௪௫௭)

அறைபுறேன் லவணத்தின்செந்தூரங்கேள்-அப்பனேகல்லுப்
புபலந்தானுலு- சறைபுறேன்சூதமதுபலந்தானென்று - கல்வத்தில்
தானிட்டு*கூவிளத்தின்சாற்றால்-மறையவேதானரைத்து ரண்டுசாம
ம்-மார்க்கமாய் குலகயில்வைத்து சொல்லக்கேளு - விறையுறேன்
போகருட கடாட்சத்தாலே- வியரமுடன்புலிப்பாணிவிளம்பக்கே
* இலவணம்-உப்பு [ளே

* கூவிளம்-வில்வம்.

கேளேதான்உலையில்வைத்துபழுக்கஊத - கிருபையுடனுருகி
யதுமலிபோலாகும்-கோளேதான்வாராமல்ஆறவிட்டு - கொற்றவ
னேகல்வமிட்டுபொடியாய்ச்செய்து- நாளேதான்அந்திரத்தாமரை
யின்சாற்றால் - நால்சாமந்தானரைத்துவில்லைதட்டி - பாளேதான்
போகாமல்காயவைத்து-பக்குவமாய்ச்சில்லிட்டுபுடமுழமுமாமே.
ஆட்மதிமூன்போகில்ஜர்துபுடம்போட்டால்-அப்பனேசெந்
தூரமாகும்பாரு- தாமேநீயெடுத்ததனைசிமிழில்வைத்து - தயவாக
பணவிடைதான்தேனிற்கொள்ள-போமேநீகுன்மமென்றதெட்டுந்
திரும்பொல்லாதநெஞ்செரிவுசூலைரோகம்- வாமேநீசூதகத்தின்வா
யுநீரும்வல்லமையால்ப்புலிப்பாணிவகுத்திட்டேனே ...(௪௫௮)

* நமனுச மெழுகு,

வகுத்திடவேநமனுச மெழுகுதன்னை வளமாகச் சொல்லுகி
றேன்மைந்தாகேளு, தொகுத்திடுவேன்லிங்கமொடு தாளகமுஞ்சிங்
கிசொற்பெரியமனோசிலையுங்கெளரிவெள்ளை, பகுத்திடுவேன்சூதங்
கெந்திவீரம்பூரம், பாங்கானதுருசியுடன்வகைக்குதானு மகத்திடு
வாஞ்விராகனிடையொன்றேதானு, மாசற்றவாளமது பதினொன்று
* நமன்,எமன். [மே ... (௪௫௯)

ஆமேதான்சரக்கெல்லாங் கல்வத்திட்டு அப்பனே அன்னக்காடியிலாட்டி-தாமேதான்நாற்சாமமானபின்பு- தயவாகமுழச்சீலை அதில்பரப்பி - போமேதான்திரித்ததனைகாயவைத்து பொங்கமுடன் ஆவினெய்பலமெட்டாகும்- தீமேதானில்லையடாசுடர்தயிலமாக தீவரமாய்மூன்றுமுறை மடக்கிச்செய்யே ... (௪௬௨)

செய்தபின்புதைலமதை யெடுத்துக்கொண்டு - செப்பரிய பனைவெல்லம்பலமுமூன்று - கொய்தசுக்குகூட இருபும் தைலங்கூடகொற்றவனேவிராகனிடை சேர்த்தரைத்து- லகதவமாய்சுண்டக்காய் அளவுகொள்ள-கடத்திலுள்ளவாதமெல்லாங்கதிகெட்டோடும்-பைதமுடன்மாதமொன்றுக்கைந்துநாள்தான்- பக்குவமாயிப்படியேமூன்றுமுறையுந்தானே ... ... (௪௬௩)

தானாகத்திருகின்றவியாதிகேளு- தகைமையில்லாகுன்மமெட்டுஞ்சூதகத்தக்குவாயு-மானகதிமிர்வாதங்குடலின்வாதம்- மன்னவனே பக்ஷமென்றவாதம்போகும்-வானகபத்தியந்தான்சொல்லக்கேளு- வன்மையுள்ளபசும்பாலும்பசுநெய்யாகும்- தேனகபசும்பயறுவறுத்துப்பாகுந்- தெளிவுடன்பத்தாநாள் விளக்கெண்ணெயால்

* பக்ஷவாதம்- பாரிசவாயு. மூழ்கே (௪௬௪)

மூழ்கியபின்மருபானம்பெண்ணுகாது - மூக்கியதொன்னூறுநாளாகுமட்டும், மாழ்கியேபோகாதேமனம்விடாதே மதிகெட்டுதில்லாம்தமருந்தேருது, காழ்த்தபண்டந்தின்றாதே காலைமாலை, காலாறநீநடந்துதிருப்பநன்று, வாழ்ந்துவாரீபோகருட கடாட்சத்தாலேவகையாகப்புலிப்பாணி வசனித்தேனே ... (௪௬௫)

ஆனைக்காஞ்சிர லேகியம்.

வசனித்தேன் * கருங்குருவைமாப்படிகால்தான், வகையாகதிருகுகள்ளிபாலரைக்கால், நசனித்தபசும்பால்தானரைக்கலாகும் நறுந்தேனும்படியரைக்கால்நவிலக்கேளு, நசனித்தமாதனிலேகலந்துக்கொண்டு, தயவாகஅடுப்பேற்றிலேகியமாய்க்கிண்டி அசனித்துஆறவிட்டுகல்லிலாட்டி-அப்பனேகலசமதில்பதனம்பண்ணே ...()

* கருங்குருவை, கருப்பரிசி.

பண்ணப்பாகழற்சிக்காயளவாய்க்கொள்ளு, புக்குவமாயைந்துதினமிருநேரந்தான், நண்ணப்பாஇம்முறையாய்மூன்றுமாதம், நன்மையுடன்கொள்வதற்குபத்தியங்கேள், உண்ணப்பாநெய்யால் பசும்பயறுகும், உத்தமனேவறுத்தஉப்புமிகவுமாகும், கண்ணப்பாமறுபத்தியமிருந்து விளக்கெண்ணெயால்மூழ்கு, கருணையுள்ளபோகருடகடாட்சந்தானே ... ... ... (௪௬௭)

அர்த்தனாரி சுரமாத்திரை.

தானென்ற * அர்த்தனாரிமாத்திரையைச் சொல்வேன் தனிவெள்ளைப்பாஷாணம்விராகனென்று, கோனென்றகோரோசனைவி

ராகமென்று கொற்றவனேமுலைப்பாலால்சாமமாட்டி பானென்ற
பசும்பயற்போதுண்டைசெய்து,பக்குவமாய் வல்முலைப்பால்தன்
னிலிய வானென்ற போகருடகடாட்சத்தாலே வண்மையுள்ளசுரம்
நீங்கி*அர்த்தமாமே... ... ... .. ... (சகூஅ)

* அர்த்தம்-பாதி-ஆமையிலுவமானம்பொன்.

அர்த்தமென்றஇடமுலைப்பால்தன்னில்கூந்தால்- அப்பனேஇ
டபுறத்துசுரம் நீங்கியொருபுறமாய்நிற்கும்-வார்த்தமென்ற இருமு
லைப்பால்தந்தால், வலைகக்கெட்டுசுரமதுதானுடனே நிற்கும் கர்த்த
னென்றுஉனைத்துதித்துலோகமெங்கும், கால்விழுந்து கும்பிடுவாரீ
கதிதாவென்று வீர்த்தனென்ற போகருடகடாட்சத்தாலே விபர
முடன்புலிப்பாணிவிரித்ததாமே... ... ... (சகூகூ)

அமிர்தசஞ்சீவிமாத்திரை.

ஆமென்ற அமிர்தசஞ்சீவிமாத்திரை அடவாகசொல்லுகிறே
னப்பாகேளு, தாமென்றசாஸ்திரபேதியேலந் தனிகோஷ்டங்கிரா
ம்புடனேசாதிபத்திரி - காமென்றசந்தனமுங்கடுகுரோகணி கன
இலுப்பைப்பூநன்றுநிலாமிச்சவேர் - வாமென்ற * இருவலிகடுக்
காய்தான்றி வற்றல்நல் விதிப்பிலியுமதுராமாமே... .. (சளய)

*இருவேலி-வெட்டிவேர்.

மதுரமென்றதிராட்சமொடு முத்தக்காசு-மைந்தனேபேரீச்ச
ங்காய்வகைக்கு - சதுரமென்றவிராகனெடை நிறுத்துக்கொண்டு -
சலியாமல் கல்வமிட்டுபூச்சாற்றாலே அதிரம்போலரைத்திடுவாய்
சாமம்நாலு அப்பனேகடலைப்போதுண்டைசெய்து- நதிவரண்டு
சுரமிஞ்சியதனமானால்-நன்முலைப்பால் வெந்நீரிலீயநன்றே (சளக)

நன்றுகுஞ்சன்னிமுதல்தோஷமெல்லாம்-நன்மையாம்பிள்ளை
பிணிநலியுந்திரும்-பன்றுகும்நாவரட்சிபறக்கும்பாரு- பரிதிகண்ட
பனிபோலாம்நசவுள்ளோர்க்கு-கன்றுதபத்தியமாய்க்காருகாரு-கதி
கெட்டால்விபரீதியது கதித்துக்கொல்லும் - குன்றும்போகருட
கடாட்சத்தாலே - குணமாகபுலிப்பாணிகூறினேனே ... (சளஉ)

அக்கரசஞ்சிவி மாத்திரை.

கூறுவேன்அக்கரசஞ்சிவிமாத்திரை- குணம்பெறவேசொல்லு
கிறேன்குறிப்பாய்க்கேளு- கோறுகிறேன் அதிமதுரங்கோஷ்டஞ்சு
க்குமுள்ளசாதிக்காய் * கொடிக்காய்சீரம் - ஊறுகிறலவங்கப்
பட்டைதிப்பிலிமூலம்-உத்தமனேகடுக்காயும்* அசமதாகம் தேறு
வேன்கொத்தமல்லிகஸ்தூரிமஞ்சள்-திறமுள்ளபழம்புளியுஞ்சீனி
[காணே (சளங)

* அசமதாகம் - ஓமம்.

* கொடிக்காய்-கொடிக்காய்புளி.

காணவே*அரத்தைரண்டுஇந்துப்போடு கருஞ்சீரகம் வகைவ
கைக்குவிராகனென்றுதோணவேமுலைப்பாலால்இரண்டுசாமந்தெர

குத்திடவேதானரைத்துதுவரைபோல-மானவே உன்னடைசெய்து நிழலுலர்த்தி,மைந்தனே*குப்பியிலே அடைத்துக்கொண்டு - நானவேநாவரட்சைநங்கைதோஷம் நலமில்லாசன்னிமுதல் சுரங்கள் போமே... ... ... ... ... ... (௪௭௪)

* அரத்தைரண்டு-பேரரத்தை-சிற்றரத்தை.

* குப்பி-சீசாபிட்டி

போகும்மூலைப்பாலிற்கொடுக்கநன்று புனிதமுள்ள அநுபானந்தன்னிலீவாய்-ஆகுமேபிள்ளைப்பிணி அநந்தம்போகும் அட்பனேபத்தியமாஇருக்கச்செய்து,யாகமாயேழுநாள்கொடுத்திடப்பின்னர் பாலகனேமறுவாரம்நீராவாரு-சோகமாய்வியாதிகண்டுமருந்தை யீவாய்சொற்பெரியபோகருடகடாக்ஷத்தாலே... ... ...(௪௭௫)

பிள்ளைகட்குபேதிமாத்திரை.

தானென்றபிள்ளைகட்கு* விஸ்ராசனந்தான்- தயவாகச்சொல்லுகிறேன்லவங்கமேலம் மாமன்னர் றசன்னபட்டைமதுரங்கொண்டிடம் மைந்தனேசன்னபத்திரி*மொட்டுத்தானும் - வாமன்னன்றவிராகனேடைநிறுத்துக்கொண்டு, வாளமதுகுத்திச்செய்து விராகமுமுன்றுதேனென்ற பழச்சாற்றால் மூன்றுசாமம் தெளிவாகத்தானரைத்து செப்பக்கேளே ... ... ... (௪௭௬)

* விஸ்ராசனம், பேதி.

*மொட்டு-மொக்கு.

கேளப்பாமிளகதுபோல்*குளிகைசெய்து- கெடியாகநிழலுலர்த்திசிமிழில்வைத்து-கோளப்பாஇல்லையடாசர்க்கரையாதல் கொற்றவனேநல்லவெல்லங்*கதலிதன்னில் நாளப்பாபிள்ளைபலமறிந்து நீயுந்தன்மணியிலொன்றிரண்டுநல்கியட்டுமே - ஆளப்பாமிளகுநீர்சாதமீய்வாய் அந்தியிலேசுக்குசிரசமுடாமே ... (௪௭௭)

* குளிகை-மாத்திரை*கதலி வாழைப்பழம்

கட்டுவாதிமாத்திரை

ஆமேதான்கியாழமிட்டுகொடுப்பாயப்பா- அரையுமேறன்கட்டுவாதிதன்னைக்கேளு தாமேதான் சாதிக்காய் சாதிபத்திரி-சுகமையுள்ளமாசிக்காய்கடுக்காய்பூவும்-நாமேதாம் சிரகமும்விடையங்குரும்பு நல்முள்ளவெந்தயமும்அபினிதானும் கோமேதால்கசகசாவுங்கோரோசினையுங் கொற்றவனேவிராகனெடைநிறுத்துவாங்கே (௪௭௮)

* விடையம்,அதிவிடையம்.

வாங்கியேமூலைப்பாலால்அரைத்துநீயும்வண்மையுள்ளமிளகதுபோலுன்னடைசெய்து- தாங்கியேநிழலுலர்த்திடநனய்பன்னுதாரணியில்கிராணிவகைஎல்லாம்போக- ஓங்கியேதேனதிலும்வெண்ணையிலுங்கொள்ளஓடிவிடும்பேதிமுதல்ரத்தக்கிராணிதீங்கில்லாப்போகருடகடாக்ஷத்தாலேதிறமாகப்புலிப்பாணிதிறஞ்சொன்னேனே ()

### பச்சைக்கர்ப்பூரமாத்திரை.

சொன்னதொருபச்சைக்கர்ப்பூரமாத்திரை சொல்லுகிறேன்பச்சையென்றகர்ப்பூரந்தான் மஞ்சனன்றவீரமுடன் பூரம்லிங்கம்மைந்தமேனருதமுடன்ரசசெந்தூரம்வின்னமில்லாசுத்திசெய்துவகைவகைக்கு- விராகனெடைதானெடுத்துகல்வத்திட்டு - அன்னனைடயின்றூர்கள் *காமப்பாலால்- அப்பனேநாற்சாமம்அரைத்துவாங்கே.

* காமப்பால்-மூலைப்பால்

வாங்கியேகுன்றிமணிபோலுருட்டி வண்மையுடநிழலுலர்த்தி வரிசைகேளு- தீங்குற்றசூலைதிரிகிரந்திதோஷம் தீன்றிடவேஎழுநாளிலதீர்ந்துபோகும்-ஓங்கியேவந்துற்றசன்னிஓடும்- ஒருநாடியில் கூடிடப்பூந்துதங்கிநிற்கும்- பாங்குற்றபத்தியங்களிச்சாபத்தியம்- பனபானபோகருடகடாக்ஷந்தானே ... .. ... ... (௪௮௧)

### சிறுபிள்ளைகட்குகட்டுவாதி மாத்திரை.

தானென்றசாதிக்காய்தனைக்குடைந்து-தன்மையுள்ளஅபினிபணவெடைதானிட்டுகோனென்ற * குளவிந்தமறைத்து காய்மேல் கொற்றவனேகவசமிட்டு சுணமதாகமானென்றவேதுபடமாகவிட்டு- மைந்தனேகவசமதைமாற்றிப்பின்பு தேனென்றமூலைப்பாலால் அரைத்துமைபோல்தெளிவாகஉழுந்தளவுபோ லுண்டைசெய்யே

* குளவிந்தம்-மஞ்சள்

செய்தஉண்டைதனையெடுத்துமூலைப்பால்தேனில் செயம்பெறவேகொடுத்துவாதிரும்நோய்கேள், நொய்டவந்த ரத்தகொட்டல் ரத்தபேதி, நெடிக்குமுயல்னே ஓடிவிடும்நோய்திரும்பார், பய்யவந்தபேதிமுதல்கட்டுங்கட்டும் பக்குவமாய்பத்தியங்கள் பாகஞ்செய்வாய்-ஐயனொனும்போகருடகடாக்ஷத்தாலேஅன்பாகபுலிப்பாணி அருளினேனே... ... ... ... (௪௮௫)

### இரத்தகொட்டலுக்கும்சீதபேதிக்கும் சூரணம்

அருளுவேன் *கர்க்கடகசிங்கியப்பா,அடவானகிராம்புடனே * கருவாப்படடை, உருளவேபிரட்டிசிறுவறுப்பதாக்கி உத்தமனே வகைவகைக்குவிராகனெருன்றுமருளவேசூரணித்துமைந்தாகேளு மயக்கமின்லைஆறுபங்காய்செய்துகொண்டு, குருவானபோகனைநீ தொழுதுயேதந்திகொடுத்துவிடுவெண்ணெயிலேகுலைந்துபோமே ()

* கர்க்கடகசிங்கி.கடுக்காப்பூ

கருவாப்பட்டை,லவங்கப்பட்டை

### • குழந்தைகளுக்குசுரமுதலியதோஷங்களுக்கு அமிர்தசஞ்சீவி குளிகை.

போமேதான்அமிர்தமென்றகுளிகைசொல்வேன்புகழுங்கோரோசனையும்யேலந்தானுந்,தாமேதான் அதிமதுரம் சண்பகப்பூதலையானசாஸ்திரமாம்பேதியோடு,நாமேதான்வகைவகைக்கு விராக

ளென்றுநலம்பெறவேக்ல்வத்தில்நன்றாயாட்டி ஆமேதான்வெட்டி
வேர்விலாமிச்சைவேரும்அடவாகக்கியாழமிட்டுஅரைத்திடாயே ()
அரைத்திடுவாயிருசாமமானபின்பு-அப்பனே குன்றியைப்போ
லுண்டைசெய்து நிரைத்தனமாய்நிழலுலர்த்திநினைவாய்க்கேளுநீம
கனேமுலைப்பாலில்றுணிக்கிவைக்கல் உரைத்துவந்தமாந்தமெட்டுநீ
ர்ப்படுவன்றான்உத்தமனே அஸ்திசுரம்வெப்புந்தீரும் மகாபுகழும்
போகருடகடாக்ஷத்தாலேமகிழ்வாகபுலிப்பாணிமனம்விட்டேனே

சிறுபிள்ளைகளுக்குகாதில்சீய்வடிகிறதற்கு ரவிதயிலம்.

விட்டதோர்கால்நண்டுவிராகன்பத்து-மவள்ளுள்ளிருளவிந்தம்
விராகனைந்து- திட்டமுறவெள்ளைக்காக்கணஞ்சாற்றுமேல திடமாகத்
தானரைத்துதேங்காய்நெய்யில்- சட்டமுடன்தான்பிசைந்துரவியி
ல்வைத்து- சாதகமாய்மூன்றுநாளானபின்பு இட்டமுடன்வடிகட்டி
யெடுத்துக்கொண்டுஎன்மகனேசெவியிலிட்சீய்தான்போமே ()

சிறுபிள்ளைகள்பெருக்கநெய்.

தானென்றுதேராதப்பிள்ளைகட்கு நயவாகச் சொல்லுகிறேன்
தண்ணீர்விட்டான்மானென்றசாறும்*வெண்மறியின்பாலும்மைந்
தனேஆவின்பால்தேங்காய்ப்பாலுந், தேனென்றஆவினெய்நறபாய்
வாங்கி - தேசிகனேவகைவகைக்குபடிகாலப்பா, கோனென்றசீனிய
துகற்கண்டோடு, கொற்றவனேபலமைந்துகொண்டுசேரே ()

* வெண்மறி,வெள்ளாடு

சேர்த்தபின்புஅடுப்பேற்றித்தீயைமூட்டுசிறுகளிமெழுகுபதஞ்
சிவக்கும்போதுகோத்தெடுத்து வடிகட்டிக்கொண்டுதானும் கொ
ற்றவனேகரண்டிவீதங் கொடுத்தாயானால் காத்திருந்தகணம்நீங்கி
கரும்புபோலாம்-கட்டழகுபிள்ளைக்கு*களையுமுண்டாம் புத்திய
றையோகருட கடாக்ஷத்தாலேபுலிப்பாணி புவிதனிலேபூட்டினே
[னே

* களை- அழகு.

குழந்தைகட்குவாந்திகண்டால்.

பூட்டுகிறேன்குழந்தைகட்கு வாந்திகண்டால்-பூவென்றகிராம்
புமதிவிடையுந்திப்பிலி-நாட்டுகிறேன்மயிலிறகுசுட்டசாம்பல்-நன்
றாகப்பொடிசெய்துதேனில்சேர்த்து- ஊட்டவேவாந்தியது ஒழிந்
துபோகும்- உண்மையிதுதவறாதுஉறுதிமெத்த, ஆட்டமிகும்போ
கருடகடாக்ஷத்தாலே, அன்பாகப்புலிப்பாணிஅறைந்திட்டேனே ()

குழந்தைகள் சிரங்குக்கு.

அறையுறேனின்னமொருயெண்ணெயப்பா- அனல்மீறிகுழந்
தைகட்குஅங்கமெல்லாம்- நிறையவேசொரிசிரங்கு நிற்றதானால்நி
லவாமாயாமணக்கெண்ணெயோடு- மறையானமேனியுடன்மணித்
தக்காளிமைந்தனேமுடக்கற்றான்வகைப்படிக்கால்குறையாமல்மூக்
குரட்டைபலாத்தசாந்து கூட்டிடுவாயெலுமிச்சம்பழத்தின்வாரே.

வாருகக்காய்ச்சிவடித் தெடுத்துக்கொண்டு வகையாகக்கரண்டிமுறைகொடுப்பாயப்பா- நேராகபத்தியந்தா நிச்சாபத்தியம்நிசயமாயைந்துநாளேழுநாளாம்,சீராகதலைமுழுகிவருவாராகில்சிறுசிரங்குப்பெருசிரங்குந்தில்லாதோடும்- பேராகபோகருடகடாக்ஷத்தாலேபேசினேன்புலிப்பாணிபேசினேனே (௪௯௨)

சிரங்குக்கு மேல்பூசுந்தயிலம்.

பேசுகிறேன்மேல்பூசுந்தயிலமொன்று*பெரியாம்பல்கிழங்குடனே*செங்கரித்தாரி-மாசறவேணிடைக்கிடைதானெடுத்துக்கொண்டுமைந்தனே அவுரிச்சார்த்தலேணலாட்டி-நாகமென்றுநிதம்பயெண்ணெய்தன்னில்கூட்டி- நாலுநாள்பூசிவரசிரங்குபோகும்-தேசிகனார்போகருட கடாட்சத்தாலே தெளிவாகப்புலிப்பாணி பாடினேனே ... .. ... ... ... ... (௪௯௩)

* பெரியாம்பல்-அல்லி*செங்கத்தாரி-சுருள்பட்டை.

பிள்ளைப்பெற மாட்டாதவர்க்கு.

பாடியேபிள்ளைவெளி காணுதபேர்க்கு பண்பானகீழ்க்காய்நெல்லிமூலம்-வாடியேபோகாமல்வளையமாடி வசமானஇடக்கால்பெருவிரலில்போட - நீடியேபிள்ளைவெளிகாணுமப்பா நினைவாகஇன்னமொருவேளைக்கேளு - கூடியேமூன்றுவேர்தனையெடுத்துகாரியெனும்பசுவின்பால்தனிலரைத்தே... ... (௪௯௪)

அரைத்தெடுத்துஉள்ளுக்குகொடுத்தால்பிள்ளை அப்பனேகீழ்விழுந்துஅழுகுப்பாரு-மறைத்தபொருளென்றுநீமயங்கவேண்டாம்மகாசோடிபுண்ணியங்களுனக்குண்டாகும்- அரைத்தனைமாய்நீயலைந்துதிரியவேண்டாம்- தூய்யமெனும்நூல்களெல்லாந்துணிந்துபாரு - உரைத்தகுருபோகருடகடாட்சத்தாலே உரைத்திட்டேன்புலிப்பாணிபுலவன்தானே ... ... ... (௪௯௫)

கற்றாழைநாற்றந்தீரகூட்டு

உலகினிலேமானிடர்க்குகற்றாழைநாற்றம் ஒழிவிடசாந்தொன்றுஉரைக்கக்கேளு-* நல்நாரிகரந்தையுடவேருங்கூட நன்றாரிவேருடனேமுத்தக்காசும்-குலமிலகுங்கஸ்தூரிமஞ்சள்தானுங் கூட்டியேவகைவகைக்குவிராகனேந்து கலகமிலையரைத்ததனைக் குகட்டில்பூசகண்டோடுங்கற்றாழை நாற்றமெண்ணே ... ... (௪௯௬)

*நல்நாரி- சிவக்கந்தை* தலைப்பேனுக்குமருந்து.

என்னவேதலையிலுள்ளபேன்கள்சாக- எடுத்துரைப்பேன்*சூதமொருகழஞ்சிவாங்கி- நன்னவேமேனியிற்சார்விட்டுஆட்டி நன்னூலில்தான்பிரட்டிநவிலக்கேளு- திண்ணவேசிலகையில்சிக்கப்போல்சொருக- சிரசிலுள்ளபேன்களெல்லாஞ் செத்துப்போகும்-கண்ணவேபோகருட கடாட்சத்தாலே கலையறிந்து புலிப்பாணிகாட்டினேனே. (௪௯௭)

*சூதம் - இரசம்.

காட்டினேன்முப்பூவேகலனில்லாமல்கண்டறிந்துசெய்தொழி

வில்கலந்துங்கொள்ள - நாட்டினேன்கபடொன்றுமில்லையப்பா நன்மையுடன்நீயாடநாதமென்பார் - பூட்டினேன்கெவனுமே யிதுலேயாகும் புண்ணியமேனவாதமொடுவைத்தியமாட - காட்டினேன்போகருடகடாட்சத்தாலே கனமாகப்புலிப்பாணிகலையில்தாமே (௪௯௮)

கலையிலேபதினாறும்இருபத்தைந்துங் கனமானவைம்பதுநூறும்பாரு - நிலையிலேசண்முகத்தில்பூசைமார்க்கம் நீமகிமைசாலப்பருநூறும்பாரு - மலையிலேபலதிரட்டுமுன்னூறப்பா மைந்தனேசோதிடமுமுன்னூறப்பா - குலையிலேகொக்கோக முன்னூறுதானுங் குருவானபோகருடகடாட்சமாமே... ... .. (௪௯௯)

வைத்தியர்க்கு புத்திகூறல்.

ஆமேதான்பண்டிதரோஅறைபக்கேளு ஆதுரையிலெளியோர்க்குஅவிழ்தமீந்து - தாமேதானன்னமிட்டவெகுபிரமீந்து தயவாகதன்னுயிர்போலவளைக்காத்து - இமேதான்சோராமல்புண்ணியவானாய் தீர்க்கமுள்ளவைத்தியனாய்இருந்துவாழ்வாய் - நாமேதான்போகருடகடாட்சத்தாலேநலமாகப்புலிப்பாணிநவின்றிட்டேனே.

வியாதியஸ்தனுக்கு புத்திகூறல்.

நவிற்றிட்டோம்புவிதனிலேவைத்தியமார்க்கம் - நலமாகச்சொல்லிவைத்தேனின்னால்வேண்டும், பவின்றிட்டநோயாளர் வைத்தியோர்க்கு - பணபாகதொழுதேற்றி தாம்பூலமீந்து இன்றிட்டமனவயல்லாமவர்க்குச்சொல்லி, இதம்பெறவே செய்ததய்ய அவிழ்தங்கொள்வாய் - கவின்றிட்டபோகருடகடாட்சத்தாலே - காசினியில்புலிப்பாணியஞ்ஞூறுமுற்றே ... ... ... (௫௱)



புலிப்பாணிமகாமுனிவர் - அருளிச்செய்த

வைத்தியம் - ௫௱

முற்றிற்று.

